[8th December 1961

கவனிக்க வேண்டியது படுக்கைகள்தான், அதை அதிகப்படுத்து வதுதான் முக்கியம். அதில்தான் கவனம் செலுத்தவேண்டுமே தவிர இதைப் போன்ற லக்ஷரி விஷயத்தில் கவனம் செலுத்த வேண்டியதில்லை. அதை பிறகு பார்த்துக் கொள்ளலாம்.

*Inspectors (Hindu Religious and Endowments Department)*

* 2194 *Q.*—**Sri N. R. THIAGARAJAN :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஹிந்துமத பரிபாலன இலாகா இன்ஸ்பெக்டர்கள் ஒவ்வொருவருக்கும் எத்தனை கோவில்களை மேற்பார்வை செய்ய அதிகாரம் வழங்கப்பட்டது ?

(இ) எத்தனை தாலூகாக்கள் ஒவ்வொரு இன்ஸ்பெக்டர் பார்வையில் இருக்கின்றன ?

(உ) அவர்களுக்குக் கொடுக்கப்படும் நிர்ணயித்த பிரயாணப்படி போதுமானதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (அ) and (இ) A statement[a] is laid on the table of the House.

(உ) Yes.

*Roads (North Arcot district)*

* 2195 *Q.*—**Sri S. M. ANNAMALAI :** கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் 1960, 1961-ம் ஆண்டுகளில் பெருவழித் துறையினரால் எத்தனை ரோடுகள் போடப்பட்டன ?

(இ) இவைகளுக்கு டெண்டர் கேட்கப்பட்டதா ?

(உ) டெண்டர் இல்லாமல் விடப்பட்ட வேலைகள் எத்தனை ? காரணங்கள் என்ன ?

The Hon. Sri P. KAKKAN : (அ) to (உ) Eight road works in North Arcot District were executed during 1960–61 by calling for tenders. Another work viz., the work of forming a road to Yelagiri Hills is being done through piece workers without calling for tenders, by splitting up the work into parts. No work was dropped in the district in 1960–61 for want of response to tender call.

**Sri S. M. ANNAMALAI :** ஸார், பொதுவாக குறைந்த டெண்டர்கள் கொடுத்தவர்களுக்குக் கொடுக்காமல் அதிகப்படியான டெண்டர் கொடுத்தவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதே, அதைக் குறித்து சர்க்கார் ஏதாவது பரிசீலனை செய்தார்களா ?

The Hon. Sri P. KAKKAN : பொதுவாக குறைந்த டெண்டர் கொடுத்தவர்களுக்குத்தான் கொடுக்கப்படுவது வழக்கம். அதுவுமல்லாமல் ரொம்ப நாட்கள் வேலை செய்து கொண்டிருக்காமல் குறைந்த நாளில் வேலையை முடிக்கக்கூடியவர்களுக்கும்தான்

[a] Printed as Appendix III on pages 250–254 infra.

8th December 1961]

கொடுக்கப்பட்டு வருகிறது. யாருக்குக் கொடுத்தால் சிக்கிரத்தில் வேலை முடியுமோ அவர்களுக்குத்தான் கொடுப்பது வழக்கம். பீஸ் வொர்க்காக கொடுத்தால் வேலை சிக்கிரமாக நடக்கும் என்பதற்காக அப்படி கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படிக்குத்தான் அங்கு ரோடுகள் போடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

*Cultural delegations*

* 2196 *Q.*—**SRI V. K. KOTHANDARAMAN**: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கலை சம்பந்தப்பட்ட குழுக்களை வெளிநாடுகளுக்கு அனுப்பும்போது மத்திய சர்க்கார் நமது சர்க்காரை கலந்து ஆலோசிப்பது உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : Not generally.

**SRI V. K. KOTHANDARAMAN** : ஸார், ஜெனரலாக மத்திய சர்க்கார் நம்மை கேட்கவில்லை என்றாலும், இப்படி அனுப்பக் கூடிய நேரத்தில் நாமாகவே அவர்கள் நம்மைக் கலந்து கொண்டு அனுப்ப வேண்டும் என்கிற ஆலோசனையையாவது நம் சர்க்கார் மத்திய சர்க்காருக்கு அனுப்ப வேண்டும் என்கிற யோசனையை யாவது நாம் அவர்களுக்குத் தெரிவிக்கக் கூடாதா என்று கேட்க விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : கொடுத்திருக்கிறோம். இப்பொழுது நம்மைக் கலந்துகொண்டு அவர்கள் ஆலோசிக்கிறார்கள்.

SRI K. VINAYAKAM : Sir, whereas it has been found that in the cultural delegations that are sent abroad, the Dravidian Culture is not properly represented and that the State Government are not consulted previously, would the Government insist that some artistes or persons who are authorities on the Dravidian Culture are also included so that their vision would be broadened and their shortsightedness would be decreased in future?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, we should make out a list firstly of persons who, according to the hon. Member, Sri K. Vinayakam, are experts in the Dravidian Culture and secondly persons who are shortsighted and thirdly, persons who will get cured of this shortsightedness through these trips abroad and on that basis we shall try to make a recommendation.

***Jail Wardens (houses)***

* 2197 *Q.*—**SRI V. K. KOTHANDARAMAN** : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

போலீசாருக்கு நல்ல வசதியான வீடுகளாக கட்டிக் கொடுப்பதுபோல ஜெயில் வார்டர்களுக்கும் கட்டிக்கொடுக்க உத்தேசம் உண்டா?